Suriyanukkup pinpakkam

poems in Tamil

by Gnanakoothan (c)

inside drawings

by Anand

price Rupees Three

First Edition Sept 1980

published by

ழ veliyeedu

39 Eswaradoss Lala Street

Triplicane Madras-600 005

General Editors

Atmanam

R. Rajagopalan

Art Editor

K. M. Adimoolam

Cunsultant Editor

Gnanakoothan

printed at

Makkal Acchakam

Madras-600 002



என்னை நோக்கி ஒருவர் வந்தார்
எதையோ கேட்கப் போவது போல.

கடையா? வீடா? கூடமா? கோயிலா?

என்ன கேட்கப் போகிறாரென்று
எண்ணிக் கொண்டு நான் நின்றிருக்கையில்

அனேகமாய் வாயைத் திறந்தவர் என்னிடம்
ஒன்றும் கேளாமல் சென்றார்.

என்ன மாதிரி உலகம் பார், இது.

இறுகத் திருகியதும்
கழுத்தில் துளிர்த்ததை மனத்தில் கண்டு
எழுது கோலைத் தேடி எடுத்தேன்

போதுமா, இன்னும் ஊற்ற வேண்டுமா?
மூடுதல் எளிமை. திறப்பது கடினம்.
மூடலே கடினமாய் இருக்குமானால்!

எளிதாய்த் திறந்து கொண்ட
எழுது கோலின் தொண்டைக் குள்ளே
ஒலிக்காத சொற்கள் போலக்
குமிழிகள்.
ஊதிப் பார்த்தேன்
ஊசியால் குத்திப் பார்த்தேன்
குமிழியில் ஒன்று கூட
அதற்கெல்லாம் உடையவில்லை
ஊற்றினேன் மையை மை மேல்
வந்தது குமிழிக் கூட்டம்
வெளியிலே விழுந்தடித்து
திருகினேன் இறுக்கி. அங்கே
கழுத்தில் பனித்தது மனத்தில் கண்டது

வரப்பு
காக்கிப் பயிர்
கம்பி குத்தி
நெட்டைக் கம்பம்
கேடயம்
வாள்
குறுக்கில் விரையும் பறவை
உதைக்கும் சப்தம்
சப்தத்தில் பூமி
ஒரு மீசை
பூசப்பட்ட வானம்
நகராத புரவி
தகர்ந்து போன பகை
நெல்லுப் பயிர்
கள்ளு குடி
குளத்துப் படிக்
கட்டில் வெட்டுப்
புண்ணில் சொட்டு
ஸ்வஸ்தி ஸ்ரீ
ராஜாதி ராஜர்க்கு
யாண்டு......
யாண்டு?
அல்லிப் பூவில்
ரத்தக் கறை

சூரியனின்
சேப்புத் தலை
தோப்பு
தெம்மாங்கு
ஏற்றத்தின்
மத்துத்தலை
தலை முழுகிய
தண்ணீர்
அலை இடி
அலை இடி
அலை
தலை
அலை
தலை
அலை
தலை
அலை
பொம்மைக் குதிரை
ஆசைப்பட்டுக் கனைச்சு
வர்ணம் உதிர்ந்துபோச்சு

திடீரென்று ஆனல்
சர்வ நிச்சயத்துடனே அன்று
தொடங்கிய எனது வாழ்வை
வியக்கிறேன் திரும்பிப் பார்த்து.

நான் அதைக் கேட்கவில்லை
எனக்காக யாரும் கேட்கவில்லை
என்பதுறுதி ஆனல்
ஏனது உண்டாயிற்று?

அவ் வேத கோஷத்தோடு
மழை மண்ணில் இறங்கும் போது
இவ் இது என் வாழ்க்கை வானி
லிருந்து பொட்டலம் போல் வீழ—

பொட்டல மான யானே என்னையே
பிரித்துப் பார்க்கும்
அதிசயம் இதன் பேரென்ன?

நிச்சயத் தோடு அன்று
வாழ்க்கையே தொடங்கிற் றென்றல்
எங்கிருந் தாரம்பம் என்று
தேடு மென் மடமை என்ன!

உலகெங்கும் பிரிப்பில்லாமல்
பொட்டல எருக்கங்காடு
புசுண்டகன் அலகுக் கூத்து

என்னை நான் பிரித்துப் பார்த்தேன்
விக்கித்துக் கண் கலுழ்ந்தேன்

கடவுளைக் கண்டேன் அந்தப்
பொட்டலத்தின் கால் விரித்த
ஒரு மூலைக் கோட்டில் நின்றார்
வெளியிலே விரைந்து வந்தார்

விரல்களால் என்னை மீன்போல்
தூக்கினார் வாய்க்குள் இட்டார்

ஆனந்தம் அவரை முந்தி
நான் சொன்னேன் அவர் சிரித்தார்

பொட்டலக் காட்டில் சர்வ
நிச்சயத் துடனே நின்றேன்

எப்படி உண்டாயிற்று
அது என்ற கேள்வியோடு

எதையும் மனதில் வைத்துக் கொள்ளாமல்
வெளியில் சொல்லும் பழக்கம் எனக்கு
நண்பன் ஒருவனோ நேரெதிர் இதற்கு

ஒன்றையும் சொல்ல மாட்டான் எதற்கும்
மௌனமாய் இருப்பதே அவன் வழியாகும்

பலரும் சொன்னோம்:
'சொல்லப்படுதலே என்றும் சிறந்தது'
அதற்குப் பிறகும் அவன் சொல்லவில்லை.
நாங்கள் வியந்தோம்.

இறக்கும் பொழுதும் சொல்ல மாட்டானோ?
ஒருநாள் அவனும் இறந்தான்
கட்டைப் புகையிலை போல அவன்
எரிந்ததைப் பார்த்துத்
திரும்பும் பொழுது தெருவில் வெயிலில்
சேவல் கூவிற்று ஒருமுறை விறைத்து.
வழக்கம் போல நான் சொன்னேன்.
'புலர்ந்ததற் கப்புறமும் கோழிகள் கூவும்'

மழை நாள்த் திவசம்
தாத்தாவுக்குத் தந்தை
செய்தது.

வீட்டுக் குள்ளே
பெரிய காலித்
தகர டப்பியில்
காற்றின் பேச்சு

கண்ணை மூடிக் கொண்டு
நடக்கும் பழக்கம் உள்ள நான்
ஆசாரத்தை அஞ்சி வீட்டின்
பின் பக்கம் வந்தேன்

கொல்லைச் சுவரின்
புராதன ஈரத்தில்
பளபளக்கும் சுவடு வைத்து
ஊர்ந்தது நத்தை ஒன்று

நத்தைக்குத் தெரியாதா
செங்குத்துச் சுவரென்று

மீண்டும் ஊர்ந்தது
மீண்டும் விழுந்தது

திவசச் சோற்றுக்குக்
காத்திருக்கும் தேவதைகள்
நத்தையைப் பிடித்துத் தள்ளி
விளையாடுகிறார்கள் பொழுது போக

இன்றும் திவசம்
மழைநாள்த் திவசம்

கடனுக்கும் பட்டினிக்கும் மான
பங்கத்துக்கும் கண்ணீர்
சுரக்காத தந்தை
குலுங்கி அழுது மனம் தேறி
புலன் அடங்கிய திருநாள்

தீ முன் அமர்ந்தேன்
தாத்தாவின் பெயரோடு
தந்தையின் பெயரைப்
பார்ப்பார் சேர்த்தார்

யாத்திரத் தண்ணீரை
மற்ருென்றுக்கு நான்
பாம்புக் கரண்டியால்
மாற்றி ஊற்றுகையில்
முற்றத்துச் சுவரில்
விரலே உடம் பாகி
அதுவே காலான ஒரு சின்ன நத்தை.

சிந்தனை
தெளிவு
சிக்கனம்
ஆனந்தம்
கவிதை 7

ஊர்புகழும் மார்கழியை
ஏன் டிஸம்பர்
கைவிட்டுப் போகிறது. 8

என் கால்ச் சுவடுகள் மண்ணில் படாதவை
தண்ணீரில் நான் பிறந்ததால். 9

தோழரே நீங்கள் எங்கே
வாழ்கிறீர்?
நாங்களெல்லாம் குழியிலே
அந்தக் குழியும் தோழரே
மாற்றான் தோளுக் கடியிலே. 10

இந்நாள் வரைக்கும்
நானமர்ந்தால்
சப்திக்காத நாற்காலி
எழுந்தால் அமர்ந்தால்
ஓசை எழுப்பத்
தொடங்கிற்று

நீரை நோக்கிக் குனிந்தால் என்
பிரதிபலிப்பின் சுமை பொறுமல்
அலைகள் விரையும் மறுகரைக்கு.

ஒரு ஜீவனுக்கும்
என் பொருட்டால்
துன்ப மில்லாத
நாள் மறைந்து
ஒவ்வொரடிக்கும்
ஒரு ஜீவன் மிதிபட்டுக்
கூவக் கண்டேன் என் சிவனே



அவருடன் காகிதக் குப்பைச் சுருளொன்று
அவருக்குக் கிணையாய் விரைந்து வந்தது
அவரால் அழைத்து வரப் படுவதைப் போல்

அன்னார் என்னைக் கடந்து சென்றார்

அதுவும் அவரைத் தொடர்ந்து சென்றது
என்னைப் பார்த்துக் கண் சிமிட்டி.

மழையில் நனைந்த கந்தல்த் துணி மீது
பாத சாரியின் செறுப்புக் கால்
ஊன்றி அகன்றது.
கந்தல்த் துணியின் தண்ணீர்
பிழியப்பட்டு ஊர்ந்ததைக் கண்டேன்
நெஞ்சம் நெகிழ்ந்தது.
உவமை ஒன்று துன்புற்ற தென்று. 13

அன்பைத் தவிர வேறொரு செய்தி
விளம்பத் தகுந்ததாய் உலகிலே இல்லை
நீண்டதாய் எங்கும் செல்வதாய்
இருக்க வேண்டும் என் அன்பு
சக்கரம் பொருந்திய சுமையை
எல்லாப் பொழுதும் எதிர் பார்த்துக் கொண்டு. 14

சொல்லப் பட்டது போலில்லை அழிவுப் பாதை

அண்மையில் அல்லது சேய்மையில்
ஏதோ ஒன்றுக் கேற்ப அஃதிருந்தாலும் :

பறவையின் சாதி உடன்வந்தழைக்க
காலுக் கடியில் பூமி குழைய
நாளையின் வாயில் பெருகிய கானம்
வருகையில் இருப்பவர் பெருமையை விரிக்க

சொல்லப்பட்டது போலில்லை அழிவுப் பாதை

எந்தக் கணமும் கழுத்தில் இறங்க
வான வில்லொன்று எதிரே நகரும்

தாரகை கடந்த ஒருபெரும் விசும்பில்
முடிவின் அருள்முகப் புன்னகை பொலியும்

நடக்கலாம்; இருக்கலாம்; நிற்கலாம்; படுக்கலாம்;
அனைத்தும் ஒன்றுதான் அழிவுப் பாதையில்

முதலடி பதியுமுன் அடுத்ததின் வரவு
அதற்குள் மகுடியின் நாக சங்கீதம்

மகுடியின் தலையே ஒருநாக பூஷணம்
நீல நித்திலத் திராவக மயக்கம்

மகுடியின் துளைவழி பிராணனின் நடனம் :

மகுடி நாதா! வேண்டாம் என்பதா
கேளாமல் கிடைத்து நெளியும் உன் பாடலை :

மகுடி நாதா சுற்றி உள்ளோரை
ஒருமுறை நன்ருய்ப் பார்க்கச் சொன்ஞய்

சுற்றி உள்ளோரில் ஒருவனுகிய நானும்
சற்றைக்கு முன்பு நின்றிருந்தேனே.

என் அது கண்டாய் என்னிடம் அப்போது?
அத்தனைப் பேர்களில் என்னை அழைத்தாய்
அழைத்த மாத்திரம் வெளியில் வந்தேன்.

வந்த மாத்திரம் நின்றிருந்த இடத்தை
அருகில் இருந்தவர் நகர்ந்து நிரப்பிஞர்

தலைக்கு மேல்தலை அதற்கும் மேல் தலை
தலைமேல் விழுந்தலை தோளில் விழும் தலை
இடுப்பில் விழும்தலை காலிடுக்கில் தலை
சுவரில் பதித்த விரட்டிக் கூட்டம்
அத்தனைக் கிடையில் மகுடி நாதா
வெட்டாமல் விழுந்தது என்தலை மண்ணில்

சுற்றிலும் ஒருமுறை பார்க்கச் சொன்ஞய்.

கண்டேன் அந்தச் சித்திரம் பெரிதும்
மாற்றப் படுவதை எப்படிக் கூறினேன்.

மேயக் குனிந்த மாடு மாற்றிற்று
உட்கார்ந்திருந்தவன் எழுந்து மாற்றினன்
பறந்த கூளம் விழுந்து மாற்றிற்று
ஓடி மாற்றிற்றுத் தொலைவிற் றண்ணீர்
கனன்றும் அவிந்தும் தீமாற்றிற்று
மூக்குத் துளைகள் விரிந்து மாற்றின

ஒவ்வொரு மூலையில் ஒவ்வோரிடத்தில்
மாற்றித் தீர்ப்பதே கடமையாய்க் கிடந்ததால்
சித்திரம் முழுதும் மாற்றப் படுகிறது
உன் மகுடியின் சப்தச் சிலந்திகளில்
நீலம் இறங்கி நிலவு தெளிகிறது

முழுவதும் என்னைப் புகையால் உடுத்தி
அதற்குள் இருப்பதாய் மற்றோர் எண்ண
இல்லாதாகிய என்னை நீ
அழைத்தால் திரளும் ஒரு பொருளாக்கிக்
கேட்கிறாய்: அங்கே இருப்பதைக் கூறு

வானில் தொங்கும் குபேரக் காசொன்று
பக்கம் இரண்டையும் புரட்டிக் காட்ட
அங்கே அங்கே அங்கே பார்க்கையில்
மாற்றிச் சொல்ல வன்மை செய்கிறாய்

மகுடி நாதன் சொல்லிக் கொண்டிருந்தான்

சுற்றி நின்றவர் கேட்டுப் பார்த்தனர்:

புகையில் என்னைக் கூப்பிட் டெடுத்தான்

சித்திரத்தை மாற்றத் தொடங்கினேன் நானும்

உன்னை வீட்டில் தேடுகிறார்கள்

ஆம்:

தான்யம் வேண்டுமே அமுது படிக்கு 15

காக்கையை எனக்குத் தெரியும்?

யாருக்குத்தான் தெரியாது. ஆனால்
இந்தக் காக்கையை எனக்குத் தெரியாது

எனக்கு நேரே ஏதோ என்னிடம்
பேச வந்தாற் போலப் பரபரப்பில்
அமர்ந்திருக்கும் இந்தக் காக்கை

ஊரில் எனது குடும்பத்தினருக்குப்
பழக்கமுள்ள காக்கை ஒன்று
எங்கள் வீட்டுச் சிறிய கரண்டியை
எடுத்துச் சென்று பெரிய கரண்டியைப்
பதிலாய் ஒருநாள் முற்றத்தில் போட்டதாம்

இந்தக் காக்கை என்ன செய்யுமோ?
காலும், உடம்பும், கழுத்தின் நிறமும்....

அதற்கு நவீன உலகம் பழகிவிட்டது

காக்கையின் மூக்கில் மெல்லிய இரும்புக்
கம்பிகள் அடிக்கடி கண்ணில் படுகின்றன

நாற்பது வயதில் மூன்று தடவைகள்
சிறகால் அடித்த அவற்றையே என்னல்
அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை

மீண்டும் ஒருமுறை இந்தக் காக்கை
எனக்கு நேரே வந்தமர்ந்தால்
தெரிந்து கொள்ள முடியுமா என்னல்?
முடியும் என்பது சந்தேகந்தான்
ஏனெனில் காக்கையை யாரும்
முழுதாய்ப் பார்த்து முடிப்பதில்லையே.

எனது உலகம் சிறியது

அங்கே

மூங்கில் ஆல் ஆன வேலி ஒன்றும்

அந்த வேலிஇல் இருக்கும் ஓணான் ஒன்றும்

உண்டு;
குச்சிப் பூச்சியும் ஒன்றுண்டதிலே,

வீட்டுக்கும் இல்லை;

வீட்டுப் பக்கம் வளர்ந்து
கனியாத மரத்துக்கும் இல்லை வேலி,
வேலியைப் போட்டதும் நானில்லை

மரத்தைப் பற்றிக் கூறினேன் அல்லவா?

இன்னும் ஒன்றைச் சொல்லணும்,

மரத்தின் கிளையில் தொங்கும்
கூடொன்றுண்டு, பழங்கூடு,

இத்தனை சொன்ன பின் எனது
உலகம் எப்படிச் சிறியதென்று
யாரேனும் என்னைக் கேட்கக் கூடுமோ

எனது உலகம் சிறியது

ஓணானும் குச்சிப் பூச்சியும்

வேலிப் படலில் காணாத போது நான்
கூட்டுக்குப் போய்விடுவேன்; ஏனென்றால்
அங்கே எனக்குச் சூரியன்
அந்தியைக் காட்டுவான் அணுவளவாக

கண்ணைக் கவரும் மார்பகங்கள்
பார்ப்பதரிதாய்ப் போய்விட்டதென்று
சுற்றிலும் பார்த்தேன்:

உயர்ந்த வெள்ளைத் துணிக்குள்
இரண்டில் வலது பொதித்திருந்தது
அதன் மேல் ஆனால் ஒரு ஈ

சாமரம் போல மார்பசைந்தது
அசையாதிருந்தது ஈ
இடத்தை விட்டுப் போக நேர்ந்தது
போய் விட்டிருக்குமா ஈ

நிச்சயம் போய்விட்டிருக்கும்: இல்லை.
நிச்சயம் இருக்கும்: ஈ போய்விட்டிருக்கும்

ஈ போய்விட்டிருக்கும் நிச்சயம் கூடப்
பார்க்கப் படாத ஈ யூகத் தளவு தான் :

கண்ணால் எடுத்துச் செல்லப்பட்ட
கண்ணைக் கவர்ந்த மார்பகத்தின் மேல்
என்றும் இருக்கிறது ஈ

வாழ்க்கையின் பலவிதபடிகளே யும் இன்பத்தையும் துன்பத்தை யும் அதனதன் தன்மையிலேயே பார்க்கப் பழகியவர் ஞானக்கூத் தன். கவிதை என்னும் மொழி பண்பட்டு இவரது ஆளுமைக்கு எளிதாய்ப் பிடிபட்டுப்போகிறது. கவிதைப் பொருள் மிகவும் நெருக் கமாயும் அதேசமயம் ஆழமான பிறிதொன்றைச் சுட்டுவதாயும் அமைகிறது. வாசிப்பவருக்கு நிறைவு தரும் கவிதைகள் இவரு டையது.

'அறிந்த நிரந்தரம்' தொகுப் பைத் தொடர்ந்து 'சூரியனுக்குப் பின்பக்கம்' வெளி வருகிறது. இதனைத் தொடர்ந்து இன்னும் சில தொகுப்புகளே ழ வெளியிடும்.



